யுடையான், குளம்பினொடுங்கூடிய ஆவினதுகூட்டத்தைவளர்ப்பான், திருமூழிக்களமென்னுந் திருப்பதியையுமுடையான் றீயமக்களுக் கொளிக்கும் கள்ளத்தையுடையனுமென்றவாறு. எனவே, நன்மக் களை வெளிவந்துகாப்பானென்பது பயன். துறை-கடவுள்வாழ்த்து.

பணியும்பணியும்பனிமாமதியா
மணியுமணியுமரற்கும்—பிணிசெய்
தலைதலைதீர்த்தான்சரணமல்லாதேதம்ப
மிலையிலைத்தாரீந்துபுலவீர். (639)

இது நாலடியு முதன்முற்றுமடக்கு.

(இ - ள்) புலவிர்காள்! பாம்பையுங் குளிர்ந்தபெரியமதியாய் மே லாக்கஞ்செய்யு மாலையையுஞ் சடைமேற்புனைந்த சிவனுகியபெரி யோனுக்குந் துன்பத்தைச்செய் தறிவைநடுங்குவித்த பிரமசிரமான தைக் கையைவிட்டுநீங்குவித்தானுகிய ஸ்ரீமந் நாராயணன்றிருவடிக ளல்லாதே, யந்தியகாலத் தறிவுநிலைகலங்கிச்சாய்ந்து பிறவியாகிய குழியிலே நீர்விழும்பொழுது விழாதே நம்மைத்தாங்குந்தூண் வே றில்லையாதலா லவன்றிருவடிகளிற் றுளபமாலிகையைச்சூட்டி வணங்குவீராக வென்றவாறு. அரற்கு மென்னுமும்மை சிறப் பும்மை. இலைத்தார் - இலைமாலையாதலால், துளவமாலிகையென்று யிற்று. புலவீர் பணியுமெனக்கூட்டுக. திணை - பாடாண். துறை - ஓம்படை; கடவுள்வாழ்த்துமாம். இவை பதினைந்தும் அடிமுதன் மடக்கு. இனி இடைமடக்குவருமாறு:—

கயிலாயம்பொன்னுலகம்புரந்தரனும்புரந்தரனுங்
களிக்கமேனு
ளெயிலார்தென்னிலங்கையர்கோன்பஃறலைக்கோர்கணைவழங்கு
மிந்தனுரான்
மயிலாய்மைவரையணங்கேகினதுயிராமேவல்புரி
மயிலைக்காவல்
பயிலாயத்தெழுந்தருளித்துணைவிழியாலுணர்த்தியருள்
பாரிப்பாயே. (640)

இது முதலடியிடைமடக்கு.

(இ - ள்) கயிலாயம் பொன்னுலகம் புரந் தரனும் புரந்தரனுங் களிக்க என்பது வெள்ளிமலையையுந் துறக்கத்தையுந் தமதாகப்புரந்து

அரனும் புரந்தரனுங் களிப்பெய்த என்பதாம். எயிலார்......கோன்- கோட்டையாற்பொருந்த தெற்கின்கண்ணுண்டாய விலங்கையிலுள் ளார்க்கு அரசனுகிய விராவணன். பஃறலைக்கோர்......ளூரான். பல தலைகளும் அறும்படிக் கொருவாளிதொட்ட திருவிந்தளூரான். மயி லாய்......பாரிப்பாயே-மயில்களாடப்பட்ட மேகந்தவழு மலையிலுறை யுந் தெய்வமனையாய்! நினதுயிர்போன்றவளாய் நினதேவல்விரும்பு மவளா மயில்போலுஞ்சாயலையுடையாளை நின்னைக்காப்பவரா யிடை விடாத ஆயவெள்ளத்தார்கூட்டத்தடைந்து திருக்கண்பார்வையாற் குறிப்பினுணர்த்திக் கருணையைவிரிப்பாயாக வென்றவாறு. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - தோழியைக்காட்டென்றல்.

புண்டரிகப்பொகுட்டணங்கேழும்மதமாவிருமருப்பிற்
புழைக்கைநீட்டி
யொண்டிறலாரொருவனைநம்மகிழ்மாறன்மகிழ்மாற
னுறந்தையோங்கற்
கொண்டலுணின்றிருபிறைநள்ளிடைவரும்பாம்பெனவளைத்துக்
கொண்டகாலை
மண்டமர்க்கூற்றுவன்கணிச்சியெனத்தடிந்ததனையவன்
வாகைவேலே. (641)

இஃது இரண்டாமடியிடைமடக்கு.

இதனுள், மகிழ்மாறன்மகிழ்மாறனுறந்தையோங்கல் என்பது வகுள மாலிகையை யுடைய காரிமாறப்பிரான் மகிழ்ந்துபோற்று மாயோன்றனது திருவுறையூர்வரையிடத்தென்பதாம். ஒழிந்தன வுரையிற்கொள்க. பகுதி - நடுங்கநாட்டம். துறையுமது.

பாரெழுதும்படிக்கெழுதாமறைமொழியைத்தமிழ்மொழியாய்ப்
பகர்ந்தமாற
னீரெழுதெண்டிரைப்பொருனைத்திருநாடன்வரையணங்கி
னீர்மைகுன்றச்
சீரெழுதியெனையெழுதிக்களபமுலைக்களபமுலைத்
தேமென்கோதை
யூரெழுதிப்பேரெழுதிக்கிழிகொடுசேறார்மறுகே
யுலாவுவேனே. (642)

இது மூன்றாமடியிடைமடக்கு.

இதனுள், களபமுலைக்களபமுலைத்தேமென்கோதை என்பது மான்மதக்குழம்பையுடைய முலையாகிய யானையையும், முல்லைமாலிகையினது தேனொடுங்கூடிய குழலையுமுடையாளென்றவாறு. பார் என்பது உலகின்கண் ணுயர்ந்தோரென்றவாறு. நீர்மைகுன்றாச் சீரொழுகியென்பது பெண்ணினதிலக்கணங்குன்றாத அவயவ அவயவிகளின்பொலிவினையெழுதியென்றவாறு. பகுதி - சேட்படை. துறை - மடலேறும்வகையுரைத்தல்.

மறைபடுசொற்பொருளினைத்தெற்றெனத்தமிழ்செய்நாவீறன்
மழைதோய்செவ்வி
யுறைபடுதெள்ளறலருவித்துடரிவரையரமகளிர்க்
குவமையாவீர்
நறைபடுசந்தனப்பொழில்சூழ்புனத்திடைவந்தடைந்ததெனி
னவில்வீரொன்னார்
கறைபடுவன்பகழியொடுமன்னுகமன்னுகங்
கதிகற்றாங்கே. (643)

இது நான்காமடியிடைமடக்கு.

(இ - ள்) மறையிடத்துண்டான சொல்லின்கண் மறைந்த பொருளினைத் தெளியும்படிக்குத் தமிழ்மொழியாகச்செய்த நாவீறரது மேகம்படிந்தபருவத்துப்பெய்யுந் துளிகளாலுண்டான தெளிந்த நீராய்வரு மருவியையுடைய துடரிவரையில் அரமகளிர்க் குவமையாகப்பட்டமங்கைமீர்! முகையவிழ்ந்தபூவிற் றேன்றுளித் தாரவாரிக்குஞ் சந்தனப்பொழில்சூழ்ந்த நுமதுபுனத்தின்கண் சத்துருக்களைக் கொலைசெய்துண்டான குருதியின்முழுகிய பகழிதைத்ததொடும் ஒரு அரசுவா ஆக்கம்பெற்ற மலை நடைகற்றதுபோல வந்தடைந்த துண்டெனிற் கூறுவீராகவென்றவாறு. உவமையாவீரென்றதனு லவர்கள்காந்தியை யுயர்த்திக்கூறினும். ஆங்கு என்ற துவமவுருபு. கதி - நடை. பகுதி - மதியுடன்படுத்தல். துறை - வேழம்வினுதல். இவைநாலு மோரடியிடைமடக்கு. இனி யீரடியிடைமடக்குவருமாறு:—

அந்தரத்தாரருவியுவாவடமலைமன்வடமலைமன்
னந்தண்சாரற்
சந்தனப்பூந்துணர்மலிந்தவண்டழையவண்டழைய
தனைக்கொண்டுற்றேன்

சிந்துரவாணுதற்களபப்புளகமுலைத்துவரிதழ்வாய்ச்
செவ்வேலுண்கட்
கொந்தவிழ்பூங்குழலீர்கைக்கொள்வீர் மாரனையடிமை
கொள்வீர்மாதோ. (644)

இது முதலிரண்டடியு மிடைமடக்கு.

(இ - ள்) அந்தரத்தாரருவியுவாவடமலைமன்வடமலைமன் னந்தண்சாரலென்பது-விசும்பின் உச்சியினின்றுமிழிந் தாரவாரிக்கு நீரருவியும், யானைத்திரளும் ஆலமரத்தினையலைக்கும் நிலைபெற்ற வடவேங்கடமென்னுமலைக்கு மன்னன் அவனதாம் அழகிய குளிர்ந்த மலைப்பக்கத்தின்கண்ணென்றவாறு. பூந்துணர்மலிந்தவண்டழைய வண்டழையதனைக்கொண்டுற்றேனென்பது - பூங்கொத்துக்கள் பரிமளத்திநற் கூட்டமானவண்டுகளைத் தன்னிடத்தழைக்கப்பட்ட அழகியவளப்பத்தையுடைய சந்தனத்தழையதனைக் கையுறையாகக் கைக்கொண்டு நும்மிடத்துவந்தேனென்றவாறு. ஒழிந்தனவும் உரையிற்கொள்க. பகுதி - இதுவுமது. துறை - கருத்தறிவித்தல்.

கதியேபற்றுனர்ஞானக்கண்ணகலாக்கண்ணகலா
காயங்காண்பா
னதியேமுற்றியவரங்கத்திடைதுயிலும்புயல்வரைமே
னயந்துவாழ்நும்
பதியேதிங்குரைத்திடுமென்றனனறையீர்நறையீர்மென்
பதுமைபோல்வீர்
மதியேதிங்கினியெனவுந்தெளிகிலனேகுதற்குமொரு
வழிசொல்வீரே. (645)

இது முதலடியுமூன்றாமடியு மிடைமடக்கு.

(இ - ள்) பேரின்பத்தையுட்கொண்டா ருள்ளக்கண்ணைவிட்டு நீங்காத இடமகன்ற பரமாகாயத்தைச் சென்றுகாணவேண்டித் திருக்காவிரியாகிய விரண்டாறுசூழ்ந்த அரங்கத்தினடுவே கண்வளரும் காளமேகம்போன்ற திருமேனியையுடைய அரங்கநாதன்வரையினிடத்து விருப்பத்துடன்வாழுந் தேனுடுங்கூடிய குளிர்ந்ததாமரையாளையொப்பீ ரிவ்விடத்து நும்முடையபதி யேதென்று கூறுகவென்றனன் கூறுகின்றிலீ ரினிமேன் மதி யாதென்றுந்துணிகிலன்; மீண்டும் போவதற் கொருவழியுங்காண்கின்றில னென்றவாறு. நறையீர்

நறையீரென்பதனைப்பாடமாற்றி ஒற்றைப்பெயர்த்து அறையீரெனக் கூட்டுக. இதனுள், கரியேபற்றினர் ஞானக்கண்ணகலாக்கண்ணகலா காயமென்பன்முதலாக அரங்கத்திடைதுயிலும்புயல்வரைமேனயந்து வாழ்நும் பதியேதிங்குரைத்திடுமென்றனனறையீ ரென்பனவீறாக நோக்கென்னும் யாப்புக்காலெனக்கொள்க; என்னை "மாத்திரைமுத லாவடிநிலைகாறு, நோக்குதற்காரணநோக்கெனப்படுமே" என்றாராக லின். அஃதே விதனுள் நோக்கிக்கொள்ளக்கிடந்தமை யாதோ வெனின், பேரின்பத்தைவிரும்பினார் ஞானக்கண்ணை விட்டுநீங்காத பரமாகாயத்தை யவர்சென்றுகாணவேண்டிப் பரமகிருபையால் வெளி வந் தரங்கத்திடைக்கண்வளரும் அவன்வரையிடத்து விருப்பத் துடன்வாழுந் தாமரையாளைப்போல்வீரென்றதனால், அவன்வரையி விருந்தும் யான்விரும்பிய நுமதுசீறூரை யெனக்குரைக்கின்றிலீ ரென்னுதறுகண்மையோ என்பது நோக்கிக்கொள்ளக்கிடந்தமையா னெனக்கொள்க. ஏகாரமிரண்டனுள், முன்னையது பிரிநிலை. ஏனைய தீற்றசை. ஒழிந்தனவு முறையிற்கொள்க. பகுதி-இதுவுமது. துறை-பதிவினுதல்.

வயற்கழுநீர்க்கழிகவின்மாண்கொழுநனையேகொழுநனையே
மகிழ்நன்மாதர்
கயற்கருங்கண்ணெனமலராமுனங்களைகட்டெறிதிருக்காட்
கரைமால்வெற்பிற்
செயற்கரியதிருவுருவாலுயிர்கொல்லிப்பாவையாய்ச்
சிறந்தீருங்க
ளியற்பெயர்யாதெனவினவியதைமொழியுமொழியுமிகழ்
வதனையன்றே. (646)

இது முதலடியுமீற்றடியு மிடைமடக்கு.

(இ - ள்) கழுநீர்க்கழிகவின்மாண்கொழுநனையேகொழுநனையே மகிழ்நன்மாதர் என்பது செங்கழுநீரினது மிக்கஅழகினையுடைய மாட்சிமைப்பட்ட கொழுவியபூமுகையைத் தங்கள் புருஷன்களை விரும்பு நல்லகடைசியரென்றவாறு. கொழுநனையேயென்பது தேற் றேகாரம்; பிரிநிலையுமாம். கொழுநனையேவிரும்புமாதர் கொழுவிய நனைமலராமுன்னங் களைகட்டெறியென்றது இறைச்சி. என்னை?

முகைபாய்நிற்பதன்றி மலர்ந்தா லிவை யெமதுகண்ணுக்குவமையா யெமதுகொழுநற்குவிருப்பத்தைக்கொடுக்குமென்னு மாற்சரியத்தாற் களைகட்டெறிந்தா ரென்னுங்குறிப்புப் பொருட்புறத்ததாய்நிற்றலா னெனக்கொள்க. அதன்றெனில், கண்ணெனமலராமுன்னங் களை கட்டெறிந்தாரென்பது பயனில்கூற்றாம். சிறப்புப்பெயர் கொல்லிப் பாவையென்பது செய்தற்கரிய வுமது அழகியவடிவினாலறிந்தேம். அறியாதஇயற்பெயரைமொழியும்; எம்மையிகழ்வதனை யொழிவீராக வென்றவாறு. செயற்கரியதிருவுரு - எழுதுதற்கரியதிருவுரு. பகுதி- இதுவுமது. துறை - பெயர்வினுதல்.

> பூந்துளபம்புனை திருமால்பொன்னியினுட்பொறியரவிற்
> புயல்போல்வண்ணந்
> தோய்ந்துதுயில்பயிலரங்கேசனைத்தொழுமாறன்றுடரித்
> தோகைபோல்வீர்
> வாய்ந்தவனப்பல்குலுக்குத்தனக்குவடுதனக்குவடு
> வகிராமுங்க
> ளேந்தெழிற்கட்புலங்கொளநின்றிடையேதங்கிடையேதங்
> கியம்புவீரே. (647)

இது கடையிரண்டடியு மிடைமடக்கு.

(இ - ள்) வாய்ந்தவனப்பல்குலுக்குத்தனக்குவடுதனக்குவடு வகிராமுங்கள் என்பது வனப்புவாய்ந்தவெனப் பாடமாற்றி அழகு வாய்ந்த அல்குலுக்குந் தனமாகிய மலைதனக்கும் வடுவகிர்நிகராகிய வுங்கள் என்றவாறு. ஏந்தெழிற்கட்புலங்கொள என்பது உயர்ந்த அழகினையுடைய கட்புலனாக என்றவாறு. இடையேதங்கிடையேதங் கியம்புவீரே என்பது இரண்டிற்குநடுவே குடியிருக்கு மருங்கான தெதுதா னவ்விடத்தென்றுவினவுவேற் கிதுவென்றுசொல்லுவீ ராகவென்றவாறு. எனவே, எனதுகண்ணிற்குப் புலப்படுவதின் றென்பது போந்தபொருள். பகுதி - இதுவுமது. துறை - இடை வினுதல்.

> உரையார்ந்ததொகைப்பனுவன்முழுதுணர்ந்துமுலகியலொன்
> றுணராதார்போல்
> வரையாதுமறைபுரிகோமானினைவுமானினைவு
> மனத்துணுடி

*விரையார்நன்பசுந்துளபத்திருமாலைத்திருமாலை*
*வில்லிபுத்தூர்த்*
*திரையாடைப்புவிமகடன்கோமானைவணங்கலரிற்*
*றிகைக்கின்றேனே.* (648)

*இ-ஃ திடையிரண்டடியு மிடைமடக்கு.*

*இதனுள், கோமானினைவுமானினைவுமனத்துறை என்பது தலைவனே! உனதுள்ளத்துநினைவும், எனது மான்போலும்விழியினையுடையாண்மனத்துணினைவும் எனதுமனத்துட்குறித்து என்றவாறு. துளபத்திருமாலைத்திருமாலை வணங்கலரிற்றிகைக்கின்றேனே என்பது துளபமாகிய அழகியமாலையையுடைய திருமகளோடுங்கூடிய மாயோனைவணங்காத் தீயமக்களைப்போல யான் மனமறுகாநின்றேனென்றவாறு. உலகியலொன்றுணராமை - உலகநடைசிறிதுமறியாமை. மறைபுரிதல் - வரைந்துகொள்ளாது களவொழுக்கத்தை நீட்டிக்கவிரும்புதல். பகுதி - பகற்குறி. துறை - வருத்தங்கூறி வரைவுகடாதல்.*

*மீனமாதியவாயவவதாரம்புரிந்தருண்மால்விண்ணோர்போற்றும்*
*வானமாமலைவளர்சீவரமங்கைவரமங்கைமார்நீரென்றான்*
*மோனமாயிருந்ததனற்பயனேதுவிருந்தினர்க்குமுகமன்கூறி*
*யீனமாகியவுறுநோய்களைகண்ணுங்களைகண்ணுங்கியற்றிலீரே.* ()

*இ-ஃ திரண்டாமடியு மீற்றடியு மிடைமடக்கு.*

*இதனுள், சீவரமங்கைவரமங்கைமார்நீரென்றுலென்பது சீவரமங்கையென்னுந்திருப்பதியிற் சேட்டமாகிய மங்கைப்பருவத்து மடந்தையரையொப்பீரென் றுலகினுள்ளா ரும்மைக்கூறுவராயின் என்பதாம். பருவம் பெதும்பையராயினும் வியப்பினான் மங்கைப் பருவத்துளுள்ளாரையொப்பீரென்றான். மோனம் - மௌனம். நோய்களைகண்ணுங்களைகண்ணுங்கியற்றிலீரென்பது காமமாகியபிணியைக் களையுங் கருணையாங்காவலை நீர் செய்கிலீரென்றவாறு. ஒழிந்தனவுமுறையிற்கொள்க. பகுதி - மதியுடன்படுதல். துறை - மொழிபெறுதுவருந்தல். இவையாறு மீரடியிடைமடக்கு. இனி மூன்றடியிடைமடக்குவருமாறு:—*

இருங்கணையின் றிவனுறிவர் தனுவேட்டை தனுவேட்டை
யிசையாதெவ்வுள்
வருந்திருமால்பணிவரைமேற்காவியங்கண்காவியங்கண்
மதியுட்கொண்டோ
ரொருங்குபுகழ்வதற்கரிதாமாதினைமாதினைக்காவ
லுவந்தாளென்கை
பொருந்துவதன்றிருவருந்தம்முட்காதன்மதர்நோக்கிற்
புகல்கின்றாரே. (650)

இஃ தீற்றடியொழிந்த வேனைமூன்றடியு மிடைமடக்கு.

(இ - ள்) இவ்விடத் திப்புனத்துற்றவிவர்கையிற் பெருமை யுடையகணையுமில்லை, இவர்யாக்கையுந் தளர்ச்சியுடையது, ஆகையா லிவர்வில்வேட்டையும் பொருந்துவதன்று; இஃதன்றி, இந்தமாத ராளைப் பெரியதினைக்காவல்விரும்பினளென்கையு முண்மையன்று, இவள் நீலோற்பலம்போன்றகண்களைப் பலகாப்பியங்களையு முணர்வி னுளுட்கொண்டோரெல்லாங்கூடியும் புகழ்தற்கரிதாம்; இருவரு மொருவரொருவர்மேலுள்ளவுள்ளக்காதலைக் கண்களாலுரைக்கின்றன ரென்றவாறு. பகுதி - குறையுறவுணர்தல். துறை - இருவர்நினைவு மொருவழியுணர்தல்.

சுனையுணீனிறநாண்மலர்நாண்மலர்தொறுந்துணர்நெகிழ்ந்துக்க
நனையுண்மூழ்கியபலவினின்சுளையினைநாங்கைமால்வரைக்கிள்ளை
யனையபேடைவாயருத்தியினருத்தியின்புறுநிலையதுகண் டோர்
நினைகலானமுங்காற்றலையாற்றலைநினதுகண்ணுறின்மானே. ()

இது முதலயலடியொழித் தேனைமூன்றடியு மிடைமடக்கு.

(இ - ள்) சுனையுணீனிற......தொறும் என்பது சுனையின்கண் ணுண்டாவதாய நீலமணியினொளியு முவமைக்குநாளும் நீலோற் பலம் பக்குவம்வந்துமலருந்தொறும் என்றவாறு. துணர்நெகிழ்ந்து ......கிள்ளை என்பது அகவிதழ்நிறைந்தொழுகியதேனின்கண், கரை சார்ந்தசோலைப்புறத்து வீசுகொம்பர்நின்று மளிந்துவீழ்ந்துநனைந்த பலவினினியசுளையைத் திருநாங்கைமாயோன்வரையிற் சேவற்கிளி யானது என்றவாறு. அனையபேடைவா......கண்டு என்பது தன துயிரனையபெடைவாயி லன்பினலருத்தி யின்பமெய்துநீதியைக்கண்டு

என்றவாறு. ஓர்கிளைகலான்......மானே என்பது ஒருவராலுநினைத் தற்கரியபெருமையாளொருவ னிரங்குமிரக்கத்தின்மிகுதியை நினது கண்காணிறுற்றுவாயல்லை, மான்போலுங்கண்ணினையுடையாயென்ற வாறு. ஒருவராலுமென்பதும், உயிரென்பதும், பேடையென்பதனுற் சேவலென்பதும் வருவிக்கப்பட்டன. பகுதி - குறைநயப்பித்தல். துறை - விரவிக்கூறல்.

மாமடந்தைகுடிபுகுந்தவன்பிலுறுமன்பிலுறுமாயோன்வெற்பிற்
காமருவண்டினமேநீர்தாந்தாந்தாந்தாமெனவாழ்கமலவைப்பிற்
பூமடந்தைமுகமலர்போன்றொருகமலத்திருகுவளைபூத்தவாகத்
தாமருவிக்குமுதமும்வெண்முல்லையுமுல்லையுமுளவோசாற்றுவீரே.()

இஃது ஈற்றயலடியொழித் தேனைமூன்றடியு மிடைமடக்கு.

(இ - ள்) மாமடந்தைகுடிபுகுந்த வன்பிலுறுமன்பிலுறு மாயோன்வெற்பில் என்பது பெரியபிராட்டிகுடிகொண்ட அன்பிலென்னுந்திருப்பதியின் மிக்கஅன்பிலெய்திய மாயவனதுவெற்பில்வந்த என்றவாறு. காமருவண்டினமே......கமலவைப்பின் என்பது அழகியவண்டுகாள்! நீங்கடாம் தாந்தாந்தாமென்றபாட்டோடும்வைகும் மருதநிலத்தின்கண்ணேயுள்ளதாமரையோடையின்கண் என்றவாறு. பூமடந்தை......சாற்றுவீரே என்பது இந்தப் பூமகள்முகத்தாமரையையொப்பதா யொருதாமரையினிடத் திரண்டுகுவளைபூத்தனவாக நிலைபெற்று மவற்றுட னொருசேதாம்பலும் முல்லையரும்பும் முல்லையாகியபண்ணுங் கண்ணிற்கண்டனவுஞ் செவியாற்கேட்டனவுமுள வாகிற் சொல்லுவீராகவென்றவாறு. பகுதி - இயற்கை. துறை - வண்டொடுநன்னயமுரைத்தல்.

உருவளர்மாத்தினமகலத்துறுதிறத்திற்பயோதரங்க
ளொருங்குதோய்ந்து
பொருவருநன்பரிமளங்கூர்வனமாலைவனமாலை
பொருந்திச்செய்ய
பருதியுடன்பனிமதியுமிருபாலுமிருபாலும்
பயின்றுதோன்றுந்
திருநெடுமால்பொருவருமிவ்வடமலையும்வடமலையு
முலைச்செந்தேனே. (653)

இது முதலடியொழித் தேனைமூன்றடியு மிடைமடக்கு.

(இ - ள்) முத்துவடங்கிடந்தசையுமுலையொடுங்கூடிய தேன்போலுமொழியினையுடையாய்! ஒளித்தழையாநின்றபெரியபிராட்டிநாளுந் திருமார்பிற்குடிகொண்டகூறுபாட்டால் அவளது திருமுலைச்சுவடுகளைத்தழீ இயதுடன், ஒப்பில்லாமணத்தைப்பெருப்பித்துக்காடாகியவியல்பையுடைய துளபமாலையையும்பொருந்தி, செம்மையுடையநேமியாகிய ஆதித்தனுடன் பாஞ்சசன்னியமாகிய குளிர்ந்த மதியையும் வல மிடமென்னு மிரண்டுபக்கமுந் தரித்திருக்குமுறையும் இடைவிடாத தோற்றப்பொலிவுண்டாந் திருவொடுங்கூடியமாயோனையொக்கும், சினையோடும்வளராநின்றமாமரத்தின்கூட்டந் தன்னிடத்துற்றகூறுபாட்டோடுங் காளமேகங்க ளொக்கத்தவழ்தல்பொருந்தியும், ஒப்பில்லாதநல்லமணத்தைப்பெருக்குங் காடாகியவியல்பையுடைய துளபமாலைபொருந்தியும், ஆதித்தனுடன் சந்திரனும் இரண்டுபக்கமுமிருக்குமுறையும் பொருந்தியுந்தோன்று மிவ் வடவேங்கடமாகியமலையுமென்றவாறு. இதனுள் வனமாலைவனமாலையென்பது அத்தச்சிலேடை. பருதியும் பனிமதியுமென்பது மாட்டேறில்லாவுருவகம். ஒழிந்தன சத்தச்சிலேடை. பகுதி - குறைநயப்பித்தல். துறை - அறியாள்போறல்.

முளைநிலாவினைநேர்நுதனேர்நு தன்முகிணகையணைமென்றோ
ளிளையளாமிவட்கேமமேமமதுறவேதிலரணிவானற்
கிளையினீண்டினர்கேளினிக்கேளினிக்கெழுதகையுறல்வேண்டிற்
களைகணுனிறைகடிநகர்க்கடிநகர்காணமன்விரைவாயே. (654)

இது நான்கடியு மிடைமுற்றுமடக்கு.

(இ - ள்) இளம்பிறையையுவமைகுறிக்கப்பட்ட சிறியநுதலினையும், முல்லைமுகைபோன்ற பல்லினையும், அணைபோன்ற மெல்லியதோளினையும், இளமைத்தன்மையையுமுடையளாமிவளுக்குப் பொன்னை யின்பமுறவணிவான் அயலவர் மகட்பேசித் தமரொடு மெமதுமனையிடத்துக்குழுமின ராகையா லினிக் கேட்பாயாக மன்னனே! உனதுசுற்றத்தோடும் எம்மோடுண்டாகியவிந்தநட்புமிகுதல் வேண்டினையே லுலகத்துயிர்கட்குக்காவலாகியவிறைவனும்மாயோன் திருக்கடிநகரிடத்துத் திருமணம், நகரிலுள்ளார்காண அயலவர்க்கு

முன்னே யிவளைவரைந்துகொள்வான்விரைவாயாகவென்றவாறு. நேர்நுதல் - சிறுநுதல். "சிறுநுதற்பேரமர்க்கட்செய்யவா" யென்றார் பிறரும். பகுதி - உடன்போக்கு. துறை - மகட்பேச்சுரைத்தல். இவைமூன்றும் இடைமடக்கு. இனி அடியிறுதிமடக்குவருமாறு:—

கூன்பிறையவெண்கோட்டிற்கொன்னாகங்கொன்னாகந்
தான்பதைத்துமூலமெனத்தாழாதுதவியமால்
வான்புகழுந்தென்னைமானனையீர்வண்டழையிங்
கேன்புரிந்துகொள்ளாதிருப்பதிசைப்பீரே. (655)

இது முதலடியிறுதிமடக்கு.

இதனுள், கூன்பிறையவெண்கோட்டிற்கொன்னாகங்கொன்னாகந்தான்பதைத்தென்பது வளைந்தபிறைபோன்றவெண்கோட்டினாற் கொல்லும்யானை பெரியவுடம்புநடுக்கமுற்று என்பதாம். தான் அசை. மூல......மால் என்பது மூலமென்றுகூறத் தாமதியாதுதவிய மாயோனென்றவாறு. ஒழிந்தனவும் உரையிற்கொள்க. பகுதி - சேட்படை. துறை - தழைகொண்டுசேறல்.

தோலாதநேமிமுதலைம்படையுஞ்சூழ்ந்திறைஞ்சப்
பாலாழியுட்டுயில்கூர்பன்னகத்தான்பன்னகத்தான்
மேலாமவுணனுரங்கிழித்தவிண்ணகரான்
காலானதென்றலைமேல்வைத்துக்களித்தேனே. (656)

இஃது இரண்டாமடியிறுதிமடக்கு.

இதனுள், பன்னகத்தான் - பாம்பணையான். பன்னகத்தான் மேலாமவுணனுரங்கிழித்தான் என்பது பலநகங்களால் வெற்றியான் மேம்பட்ட விரணியனுரத்தமார்பைப்பிளந்தானென்றவாறு. ஒழிந்தனவும் உரையிற்கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

சூழித்தறுகட்கடாயானைதோலாத
பாழிப்பகுவாயிடங்கரின்கைப்பட்டநா
ளாழிப்படையுடன்சென்றுளரியையாளரியைக்
காழித்திருமாலைக்கண்டுட்களித்தேனே. (657)

இது மூன்றாமடியிறுதிமடக்கு.

இதனுள் ஆளரியையாளரியை.........களித்தேனே என்பது ஆண்ட வென்னுந்திருநாமத்தையுடையானை, நரனுஞ் சிங்கமு மானானை, சீகாழியில்வாழுந்திருமாலைக் கண்களாற்கண் டுள்ளங்களித் தேனென்றவாறு. துறை - கடவுள்வாழ்த்து.

அண்ணாந்தெழுந்ததுணைமுலையார்க்காருயிர்தங்
கண்ணாங்கொழுநரெனுங்கட்டுரைகேட்டுற்றுணர்ந்துந்
தண்ணார்வகுளத்தமிழ்மாறர்க்கன்பிலர்போன்
றெண்ணாதகன்றனராலென்சுகமேயென்சுகமே. (658)

இது நாலாமடியிறுதிமடக்கு.

இதனுள் என்சுகமேயென்சுகமே என்பது எனக்கு என்னு டையகிளியே யென்னமகிழ்ச்சியுள்ளதென்றவாறு. பகுதி-பொருள் வயிற்பிரிதல். துறை - பறவையொடுபரிவுற்றுரைத்தல். இவை நாலும் ஓரடியிறுதிமடக்கு. இனி ஈரடியிறுதிமடக்குவருமாறு:—

மூன்றாயமைந்ததொழின்முன்னானை முன்னானை
தான்றாழ்தடத்தழைத்தசங்கரியைச்சங்கரியைத்
தோன்றாதிடத்தமைத்தசூழ்ச்சியனைத்தொல்லைநா
ளீன்றானையீன்றானையென்னுளத்தேவைத்தேனே. (659)

இது முதலிரண்டடியு மிறுதிமடக்கு.

(இ - ள்) சிருட்டி திதி சங்காரமென்று தன்னாலமைக்கப்பட்ட மூன்றிற்கு மங்கங்கு முன்னாயிருக்கப்பட்டவனை, முதலைமுன்னான யானை தாணாழ்ந்ததடத்துநின்று மூலமென்றழைத்த சங்கினையுடைய அரியென்னுந்திருநாமத்தையுடையானை, உமையை வேறுபட்டுத் தோன்றாது தனதிடப்பாகத்தடக்கின விசாரத்தையுடைய அரனை முற்காலத்தீன்ற பிரமனையீன்றவனை முத்தியளிக்கவல்லபிரமமென வுட்கொண்டேனென்றவாறு. திணை - பாடாண். துறை - கடவுள் வாழ்த்து.

கோதறவில்வாங்கியுடக்குஞ்சரத்தாற்குஞ்சரத்தாற்
கேதமிழைத்தவிராவணியையன்றுதவ
சாதனத்தாற்கொன்றபிரான்றம்முன்னைத்தம்முன்னைப்
பாதகந்தீரப்புகழ்வார்பாதம்பணிந்தேனே. (660)

இது முதலடியு மூன்றாமடியு மிறுதிமடக்கு.

(இ - ள்) குற்றந்தீரத் தனுவைக்கைக்கொண்டு தொடுக்கும் அம்பினால் ஐராவதப்பாகனான இந்திரனுக்கு மானபங்கத்தையுண்டாக்கின விந்திரசெயித்தை, முற்காலத்துத் தவசரிதையாற்கொன்ற இலக்குமணனென்னு மெனதுசுவாமிக்குத்தமையனை, யாவரேயாயினுந் தங்கள் கழிபிறப்பிற் பாவந்தீரப்புகழாநின்றார் அவர்பாதத்தையெனதுபிறவித்துன்பம்நீங்க வணங்கினேனென்றவாறு. திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப்பணிதல்.

பொன்பொற்றிலங்குமலர்ப்பூவையேபூவையே
மன்பொற்றிருமேனிமாயோன்வடமலைமேன்
மின்பொற்றொடித்தடக்கைகூப்பாதவீறென்னோ
நின்பொற்றிருநுதற்குநேர்மதிக்குநேர்மதிக்கும். (661)

இது முதலடியு மீற்றடியு மிறுதிமடக்கு.

இதனுள் மலர்ப்பூவையேபூவையே மன்பொற்றிருமேனி என்பது தாமரையிலிருக்குந் திருமகளையொப்பாய்! காயாம்பூவையொத்த மிக்கபொலிவினையுடைய திருமேனி என்றவாறு. நின்பொற்றிருநுதற்குநேர்மதிக்கும்நேர்மதிக்கும் என்பது உனது அழகியநெற்றிக்குவமைகுறிக்கும் நேரியபிறைக்குமென்றவாறு. ஒழிந்தனவு முறையிற்கொள்க. பகுதி - நாணநாட்டம். துறை - பிறைதொழுகென்றல்.

அந்தமுதலாயமைந்தானையெம்மனோர்
பந்தமறுத்தாள்பரனைச்சுமித்திரைதன்
மைந்தனொடுங்கான்போந்தமாதவனைமாதவனை
யெந்தையையல்லாதிறையுண்டென்னுவேயென்னுவே. (662)

இது கடையிரண்டடியு மிறுதிமடக்கு.

இதனுள் மாதவனைமாதவனை என்பது திருமகள்காந்தனை, பெரிய தவசரிதையுடையானையென்றவாறு. எந்தையை - எம்முடைய சுவாமியை. அல்லாதிறையுண்டென்னுவேயென்னுவே என்பது அவனையன்றி வேறுபரப்பிரமமுண்டென்றுகூறு தென்னுடையநாவென்றவாறு. ஏகார மிறுதிய தீற்றசை. துறை - கடவுள்வாழ்த்து.

தாவாதபேரின்பஞ்சார்வதற்குச்சிற்றின்பத்
தேவாமலென்னைமதனெய்யாமையெய்யாமை

மாவாதனைமறந்துவாமனனேவாமனனே
தேவாதிதேவனெனச்சந்ததமுஞ்சிந்தித்தே (663)

இஃது இடையிரண்டடியு மிறுதிமடக்கு.

(இ - ள்) என்னைமதனெய்யாமையெய்யாமை என்பது என்னைக் காமன் சிற்றின்பத்திலேவேண்டிமூட்ட என்மேற் பஞ்சபாணங்களை யிடைவிடாமைத்தொடுத்திடாமல் என்றவாறு. வாமனனே ......வாமனனே என்பது வாமனவதாரமாகியநாராயணனே தேவர்க்கெல்லாம்முதலானதேவனென அனவரதமுஞ்சிந்தித்துக் கழிந்த பிறப்பிலு மிப்பிறப்பிலுமுண்டான பொல்லாதவாதனைகள்யாவும் மறந்து என்னோடொத்துவா வென்னுடையமனனேயென்றவாறு. திணை - காஞ்சியைச்சார்ந்தபொதுவியல். துறை - பொருண்மொழிக் காஞ்சி. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்தெனினுமாம்.

காண்டகுபொற்பூமடந்தைநற்பாரிகண்ணன்பே
ராண்டபழம்பதியுமந்தாமமந்தாமங்
கூண்டளிபண்பாடுதுழாய்கூராழிகைவலத்தே
பூண்டதவன்சீருளத்தேபூரியார்பூரியார். (664)

இது நாலாமடியு மிரண்டாமடியு மிறுதிமடக்கு.

இதனுள் ஆண்டபழம்பதியு......துழாய் என்பது அவன்புரந்த தொன்மைப்பதமாவது பரமபதம், அழகியமாலையாவதும் வண்டுகள் தேனையுண்டு பண்களைப்பாடும் வனமாலையாம் என்றவாறு. அவன் சீருளத்தேபூரியார்பூரியார் என்பது அவனதாந்திருமேனியிற்காந்தியைத் தீயமக்கள் உள்ளத்தாற்றியானித்து அகத்தேநிறையாரென்றவாறு. எனவே யெப்படியீடேறுவரென்பது குறிப்பு. திணை - பாடாண். துறை - புகழார்ப்பழித்தல்; கடவுள்வாழ்த்தெனினுமாம். இவையாறும் ஈரடியிறுதிமடக்கு. இனி மூன்றடியிறுதிமடக்கு வருமாறு:—

முன்னிலங்கொள்ளாதபிலமுன்பரையுமுன்பரையுந்
தன்னாருலீந்தவரந்தாவுறவேதாவுறவே
மன்னிலங்கேசன்முதலாமைந்தரையுமைந்தரையு
மின்னுயிருண்டான்குணங்கற்றின்பமயின்றேனே. (665)

இஃது ஈற்றடியொழித் தேனைமூன்றடியு மிறுதிமடக்கு.

(இ - ள்) மன்னிலங்கேசன்முதலாமைந்தரையுமைந்தரையும் என்பது இராவணன்முதலாய மிடுக்குள்ளாரையும், அவர்கள்புதல்வரையும் என்றவாறு. முன்னிலங்கொள்ளாதபிலமுன்பரையுமுன்பரையுந் தன்னரனுலீந்தவரந்தாவுறவேதாவுறவே என்பது முன்னாளிற் பூமியிடங்கொள்ளாதபாதாலத்தின் மூலபெலப்படையாய்வந்தவலியுடையாரையும் முன்னாளுமை தனதுபுமானனசிவனாற்கொடுப்பித்த வரமும், பிறர்கொடுத்தவரமும் அழிவுறப் பிரமாவும் பேராண்மையிருந்தபடியோவென்று மனத்திலேவிசாரிக்க என்றவாறு. இன்னுயிருண்டான்.....றேனே என்பது அவர்களினியவுயிரையுண்ட தெசரதராமன்கலியாணகுணங்களைக்கூறிப் பேரின்பமெய்தினேன் என்றவாறு. திணை - இதுவுமது. துறை - கடவுள்வாழ்த்து.

கண்படையுண்கண்சிறிதுங்கண்ணகன்றகண்ணகன்றவ்
வொண்பொருள்செய்வார்பிரிவினுண்ணிறையுமுண்ணிறையும்
பண்புறநில்லாதினியீங்கென்செய்வேன்பாமாறன்
றண்பொருனைத்தண்டுறைவாழ்தாராவேதாராவே. (666)

இது கடையயலடியொழிந்த வேனைமூன்றடியு மிறுதிமடக்கு.

(இ - ள்) பாமாறன்றண்பொருனை.........தாராவே என்பது திருவாய்மொழியாகியப்னுவலைச்செய்தகாரிமாறப்பிரான்பொருனைத்தண்டுறையினிடத்துத் தாராவாகியபறவையே! கண்ணகன்றகண்ணகன்றவ்வொண்......பிரிவின் என்பது இடம்விரிந்தநாட்டின்கணீங்கிச் சுத்ததிரவியத்தையீட்டவேண்டிப்பிரிந்தார்பிரிவினால் என்றவாறு. உண்ணிறையுமுண்ணிறையும் பண்புறநில்லாது என்பது எனதுள்ளத்துணிறைந்ததொன்றாய மகளிர்க்குச்சிறந்ததெனவுலகம் விசாரிக்கப்பட்ட எனதுநிறையானதும் எனதுகுணத்தின்வழிநில்லாது அதுவேயுமன்றி என்றவாறு. கண்படையுண்கண்சிறிதுந்தாரா என்பது எனதுமையுண்கண்களானவை கணப்பொழுதுமுறங்குவதுஞ்செய்கின்றில என்றவாறு. இனியீங்கென்செய்வேன் என்பது மேலிவ்விடத் தியான்செய்வதுயாதுதானென்றவாறு. இது கொண்டுகூட்டுப்பொருள்கோள். பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - பறவையொடுபரிவுற்றிரங்கல்.

பாழிமருப்பேனமதாய்ப்பாரிடந்தான்பாரிடந்தான்
சூழியல்புற்றுடுபுலித்தோலுடையான்றோற்றஞ்சால்
காழ்வயிரக்குன்றெடுத்தகண்டகனைக்கண்டகனை
யூழறக்கொன்றனகர்பூந்தேனிலுறையூருறையூர். (667)

இது முதலயலடியொழித் தேனைமூன்றடியு மிறுதிமடக்கு.

(இ - ள்) ஏனமதாய்ப்பாரிடந்தான் - வராகமாகிப் பூமியையுழு தெடுத்தான்; பாரிடந்தான்...........தோற்றஞ்சால் - பூதகணங்கள் சூழுமியல்புபொருந்தச் சுடுகாடரங்காகநடஞ்செய்யும் புலித்தோலு டையுடையானது தோற்றஞ்சான்ற. காழ்வயிரக்குன்றெடுத்தகண் டகனைக்கண்டகனை யூழறக்கொன்றனகர்-மிகவுந்திண்ணியகைலையை யெடுத்த விராவணனாகியபாதகனைச் செருக்களத்துக்கண்டு திருவுள் ளத் திரக்கத்தின்முறையின்றிக்கொன்றவனதுநகரமானது. பூந்தே னிலுறையூருறையூர். கோட்டிலுங் கொடியிலு நீரிலுமுண்டாகிய பூவிற்றேன்றுளி திசைதிசைபரக்குந் திருவுறையூராமென்றவாறு. திணை - பாடாண். துறை - நகரவாழ்த்து; கடவுள்வாழ்த்துமாம்.

ஏற்றமாம்வெள்ளோதிமத்தான்மழவிடையூர்
தோற்றமார்வெய்யபுலித்தோலுடையான்றோலுடையான்
போற்றவாழ்வுற்றவிருப்புள்ளேறுபுள்ளேறு
மாற்றலானன்பிலார்க்கன்பிலானன்பிலான். (668)

இது முதலடியொழித் தேனைமூன்றடியு மிறுதிமடக்கு.

(இ - ள்) புலித்தோலுடையான்றோலுடையானென்பது புலி யினதுதோலை யுடையாகவுடையானும், ஐராவதத்தை யுடையா னும் என்பதாம். விருப்புள்ளேறுபுள்ளேறு என்பது தன்னிடத் தன் புள்ளத்துமிகும் கருடனிலேறும் என்பதாம். அன்பிலார்க்கன் பிலானன்பிலான் என்பது தன்னிடத்தன்பிலாரிடத் தன்பில்லாதா ன வன்யாவனெனி லன்பிலென்னுந்திருப்பதியின்மாயோனென்பதாம். எனவே அயனும் அரனும் இந்திரனும் பரவும்படிக்குவாழ்வுபெற்ற கருடவாகனத்திலேறும்பெருமையையுடையான் அவன்யாவனெனில் அன்பிலாதாரிடத் தன்பிலாதான், அன்பிலென்னுந்திருப்பதியின்

மாயோன் அவனுக்கன்புசெய்வீராயிற் புலவிர்காள்! நமக்கு முத்தி பெறலாமென்பது குறிப்பு. திணை - வாகை. துறை - பொருளொடு புணர்தல்.

வாமவெங்கதிர்மண்டிலமண்டில
நாமநேமியினன்மறைநான்மறைப்
பூமன்றந்தையொண்பொற்கழற்பொற்கழற்
காமன்பாரடிப்போதென்றலைத்தலை. (669)

இது நான்கடியு மிறுதிமடக்கு.

(இ - ள்) ஆதித்தன்மண்டிலத்தை வட்டத்திருவாழியான் மறைக்கப்பட்டவன், நாலுவேதத்தையு மோதியுணர்ந்தவனுந் தாமரைப்போதிற்பிறந்தபிரமனுக்குப்பிதா, அவனதாம் பொன்னின்வீரக் கழல்புனைந்த பொலிவினையுடையதிருவடிகளிடத்துண்டாம் அன்புடையார்திருவடித்தாமரைப்பூவை எனதுசிரத்தின்கட்புனைந்தேனென்றவாறு. கழற்கு என்பது ஏழாவது நான்காவதாயிற்று. மண்டிலம் ஆதித்தன்மண்டிலத்திற்கும், வட்டத்திற்கும்பேர். திணை - இதுவுமது. துறை - பழிச்சினர்ப்பணிதல். இவைபதினைந்தும் அடியிறுதிமடக்கு. ஆகமடக்குசரு. இவைநாற்பத்தைந்து மோரடியு மீரடியு மூவடியு நாலடியுமாகி யடிதோறு மோரிடத்தைமடக்கியது. இனி யடிதோறு மீரிடத்தனவா மூவகைமடக்கினுள் முதலொடிடைமடக்குவருமாறு:—

கட்காவிகட்காவினைவதும்வண்டிமிர்காமன்காமன்வாளிக்
குட்காநைவுறுநிறையுமுற்றுணர்ந்துமுறுதியெனக்குறுகிலீராற்
புட்காமன்வடமதுரைப்புரிகுழலீர்காமவலையுள்புக்காழ்ந்து
மட்காநின்றதற்குறுதிப்புணைமடலென்றேயுளத்தேமதிக்கின்றேனே.

இது முதலடி முதலொடிடைமடக்கு.

இதனுள், கட்காவிகட்காவினைவதும் என்பது கண்ணாகியசெங்கழுநீர்களுக் கெனதாவிவருந்துவதும் என்பதாம். காமன்காமன் வாளிக்கு என்பது காவினிடத்துநிலைபெற்ற காமன்பஞ்சபாணங்களுக்கு என்பதாம். ஒழிந்தனவு முறையிற்கொள்க. பகுதி - மடல். துறை - தன்றுணிவுரைத்தல்.

அலையோடுயர்பாற்கடல்கடைந்தானன்பிலனையீர் திருவயிறு
விலையோவிலையோவிடைநினைவீங்கென்றேவென்றேவறியீர்போன்
மலையோமுலைவாணுதல்சிலையோமையுண்கருங்கட்குவளையுள்வன்
கொலையோகுடிகொண்டதுசிறிதுங்குடிகொண்டிலவோகருணையுமே.

இஃ திரண்டாமடி முதலொடிடைமடக்கு.

இதனுள் வயிறுவிலையோ விலையோவிடையென்பது நமது அழ கியவயி றுவினிலையோ இடையென்னுமுறுப் புமக்கில்லையோ என்ப தாம். நினைவீங்கென்றேவென்றேவறியீரென்பது இவ்விடத்து நமதுவிசாரம்யாதோ? காமப்பிணியையுந்தெளிகிலீர் என்பதாம். ஒழிந்தனவு முரையிற்கொள்க. பகுதி - ............ துறை - இடை விறுதல்.

இரவிற்குப்படருழந்திவ்விரவொழிப்பாயெனவிரங்கியிடதுபாகம்
புரவிற்குங்களிவரவன்றிரட்பொழித்ததுறிலரங்கபொருணீயன்றே
கரவெற்புக்கரவெற்புக்கவினணியான்கங்கையன்கங்கையனுமந்த
வரவெற்பன்மலரயனுமகிழ்ந்திடச்சென்றுதவியதூஉமதிக்குங்காலே.

இது மூன்றாமடி முதலொடிடைமடக்கு.

(இ - ள்) பிரமசிரத்திலிரந்ததற்குத் துன்பமிகுந் தவ்விரப் பினைத்தவிர்ப்பாயாகவென்று சிவன்வேண்டற்குக்கருணை கூர்ந்து, அவனதிடப்பாகத்தை யச்சிவன்கொடுப்பத் தனதாகவாண்ட அவன் பாரியா முமைக்கும் மனத்துட்களிப்புண்டாக முற்காலத் தவ்விரப் பைத்தவிர்த்தகருணையைவிசாரிப்பாருண்டாகி லப்பரப்பிரமம் அரங்க நாதனே! நீயேயாம்; அதுவுமன்றி, கைபடைத்தமலையென்பதாங் கேசேந்திரன் மூலமேயென்ன அதற்கும், அரவும் எலும்பும் அழகு செய்யுமாபரணமாகப்புனைந்தான் பிரமசிரத்தைக்கையிலேந்தினன் கங்கையாற்றைவேணியிற்கட்டினன் அந்தச்சேட்டமானவெள்ளிமலை யானும் மலருளானும்பிரமனு மகிழும்படிக்குச்சென்றுதவியதூஉம் விசாரிக்கிலென்றவாறு. ஒழித்ததும் என்னு மும்மை செய்யுள் விகாரத்தாற்றொக்கது. வெற்பன் மலரயனும் என்பது "எஞ்சுபொ ருட்கிளவிசெஞ்சொலாயிற், பிற்படக்கிளவாமுற்படக்கிளத்தல்" என் பதனால் வெற்பனும் என்னுஞ்சொல் வெற்பனென வும்மையில்சொல் லாயிற்று. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

அருண் மாலைபயின் றெழுதகையிருளைவேண்டலிற்சென்
றறையாண்மாரன்
பொருமாலைக்கிடுகருப்புச்சிலைவளைத்தித்துயர்க்கடற்கோர்
புணையுங்காணேன்
மருண்மாலைவரும்வருமென்றிடைவேற்காயெவன்செயன்மேன்
மனனேமல்லைத்
திருமாலைத்திருமாலைக்கண்டளியாயளியாய்நின்
றிருத்தாரென்றே. (673)

இது நாலாமடி முதலொடிடைமடக்கு.

(இ - ள்) மனனே! இருண்டமாலைவரும்வருமென் றுண்டியுமுறக்கமுந்தவிர்ந் துடம்புமுயிருமெலியாநின்றவெனக் குடலுமுயிருமாக்கமெய்த என்னிடத்துவைத்தகருணையியல்பாக விடைவிடாத உரிமையையுடைய வெனதுயிர்த்தோழியானவள், திருக்கடன்மல்லைமாயோனைச்சென்றுகண்டு, நினதுதாமத்தைவிருப்புற்றமையா லென்னுயிரானபொலிவினையுடையாள் பொலிவிழப்ப அவளிடத்துண்டானமயக்கத்தை நினதுதிருவுளத்தாற்கண்டு நினதுதிருமார்பிற் புனைவதாய வண்டுகள் நல்லதென்றூதாயும் அழகியதிருமாலிகையைத் திருவருள்புரிந்துதாராயென்று வேண்டிக்கோடலோடுங்கூறுள்; அஃதறிந்து காமனானவன் ஆலையினிடத்திடும்படிக்குண்டானகரும்பைச் சிலையாகவளைத்துப் பூப்பாணங்களையுடக்கிப் போர்செய்யாநின்றான், ஆதலால் இத்துன்பமாகியகடலைக்கடக்க அவன்றாமமாகியபுணையேயன்றி வேறுபுணையுங்காணே னினிமேல் யாதுசெய்வதென்றவாறு. இதனுள், திருமாலைத்திருமாலையென்பது திருவினோடுங்கூடியமாலை, பொலிவினையுடையாண்மயக்கத்தையென்பதாம். கண்டெனபதனைத் தோழிசென்றுகண்டு, திருவுளத்தாற்கண்டு என விரண்டிடத்துங் கூட்டுக. அளியாயளியாயென்பவற்றுள் முன்னையது ஒருதொழிலினைமேற்செய்யாயென்னுமெதிர்மறையாகியமுன்னிலைவினைச்சொல், அத்தொழிலைச்செய்யென்ன எடுத்தலோசையாற்கூறி வேண்டிக்கோடற்கண் ணுடம்பாட்டுமுன்னிலைவினைச்சொல்லாயிற்று; என்னை "செய்யாயென்னுமுன்னிலைவினைச்சொல், செய்யென்கிளவியாகிடனுடைத்தே" என்றாராகலினறிக. பின்னையது வண்டுகள் நல்லதென்றூதாயும் என்பதாம். திருமாலையென்பது பிறள்போற்கூறிய

தாம். தலைவிகூற்று. முன்னிலை - தோழி. மனனே என்பது முன்னிலைப்புறமொழி. பொருள்கோள் - கொண்டுகூட்டு; மாட்டுறுப்பெனினுமாம். திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - மெலிவொடுகூறல். இவைநாலு மோரடியிடத்து முதலுமிடையு மடக்கியது. இனி யீரடியிடத்து முதலுமிடையுமடக்குதல்வருமாறு:—

பொருந்தார்பொருந்தார்வரைமார்பிற்புதையப்புதையப்புதைவரிவில்
வருந்தாவருந்தாபதன்மனதுகளிக்கக்களிக்கமிதிலைபுகுந்
திருந்தாரணியோர்புகழவளைத்திறுத்தானிமையோரிடுக்கணுறு
தருந்தாரமுதன்றருள்குடந்தையாராவமுதென்னகத்தமுதே. (674)

இது முதலிரண்டடியு முதலொடிடைமடக்கு.

(இ - ள்) சத்துருக்களாயுள்ளார் சமர்முகத்துப் புறங்கொடாதுபோர்செய்யும் வெற்றிமாலைபுனைந்த வரைபோன்றமருமத்திற் புதையும்படிக்குக் கட்டிலம்பைத்தொடுக்கப்பட்ட நாரிவரிந்ததனுவை இந்திரியங்களில்வியாபரிக்குஞ் சத்தாதிகளுக்குச் சற்றுமீடுபடாத அரியதவத்தையுடையோனாகிய விச்சுவாமித்திரன்மனத்துட்பிரியமோங்கப் பிராட்டிதிருவுள்ளமுஞ் சனகராசன்மனதுங் களிக்க மிதிலையுட்புகுந்து பெரியதாரணியோர்கொண்டாட வளைத்துமுறித்தான், அவன்யாரெனில் விண்ணோர் துன்பமெய்தாமை யாராவமுதைக் கடைந்துகொடுத்த திருக்குடந்தையாராவமுதம், அவன் என்னுள்ளத்துக்குத் தித்திக்குமமுதமாமென்றவாறு. துறை - கடவுள்வாழ்த்து.

உமையாளுமுமையாளும்பசுபதியுமும்பரினும்
  பரின்வாழ்வெய்துஞ்
சுமையாகநிலைபெறுமீங்கிதுகிளையேயெனநந்தி
  சொன்னபோது
மமையாதுன்னமையாதுன்னக்கைலைகிளைகிளைக்கை
  யாக்கனுதி
கமையாலெய்தியவரங்கள்காட்கரையாய்களைந்திலையேற்
  களைகண்யாரே. (675)

இது முதலடியு மூன்றாமடியு முதலொடிடைமடக்கு.

(இ - ள்) உமையாளும்............வாழ்வெய்தும் என்பது உம்மையாட்கொள்ளும் உமையானவளுஞ் சிவனும் உச்சமலையின்கண்

தேவர்களோடுங்கூடிச்செல்வமெய்தும் என்பதாம். சுமையாக...... போதும் என்பது அவர்களைத் தனதுசென்னியிற்கொண்டுநிற்கும் இவ்விடத்திருந்தமலையை யெடாதேகொள்வாயென நந்திசொன்னகாலத்தும் என்பதாம். அமையாதுன்.........அரக்கன் என்பது அவனுரைக்குமடங்காதே உன்னமரமும் மூங்கிலும் ஆச்சாவும் நெருங்கின அந்தக்கயிலையைக்கிண்டியெடுத்த விருபதாகியகையையுடைய விராவணன் என்பதாம். ஆதி......யாரே என்பது ஆதிகாலத்து இந்திரியங்களையடக்கினபொறையாலெய்தியவரங்களைத் திருக்காட்கரையாய்! அழித்து அவனைக்கொன்றிலையெனி லுலகுயிர்கட்கியாவர்காவலென்றவாறு. துறை - இதுவுமது.

இமையவரையிமையவரைமகிழ்விப்பான்பொருவில்பொரு
வில்லாயேந்திச்
சமையவுடக்குபுசரந்தொட்டெயிலொருமூன்றெரிகதுவத்
தலைநாள்வென்ற
வுமையவருமதிப்பவெயிலேழுடையான்பஃறலைக்கு
முறையூராயா
டமையமைவில்வினைவளைத்தன்றேவினையேவினை நினைப்போன்
றளியார்யாரே. (676)

இது முதலடியு நாலாமடியு முதலொடிடைமடக்கு.

(இ - ள்) இமையவரையிமையவரைமகிழ்விப்பானென்பது இமவானென்னுமலையைத் தேவர்களைக்களிப்பிக்கவேண்டியென்பதாம். பொருவில்பொருவில்லாயேந்தி என்பது ஒப்பற்ற போர்பொருதற்குரியவில்லாகவெடுத்தென்பதாம். சமையவுடக்குபு.........மதிப்ப என்பது குறைவறவுடக்கி யம்மைத்தரந்து மூன்றுகோட்டையினும் அனல்பற்ற முன்னைநாண் முப்புராதிகளைவென்ற வுமைபாகருமதிப்பதாக என்பதாம். எயிலேழுடையான்.........யூராய் என்பது ஏழுகோட்டையோனாகிய விராவணன்பத்துத்தலைக்குந் திருவுறையூராய்! என்பதாம். ஆடமையமைவில்வினை......யேவினை என்பது வெற்றிபொருந்தின மூங்கில்வில்லைவளைத்து முன்னாள் அம்பினைவிட்டனை என்பதாம். நினைப்போன்றளியார்யாரே என்பது ஆதலால் நின்னைப்போ லுலகுயிர்களைக்காக்குங் கருணையுடையகடவுளர் இல்லையென்றவாறு. துறை - இதுவுமது.

சுந்தரத்தோளிணையழகர்துணையடிசேர்மகிழ்மாறன்
    குடரிநீடுஞ்
சந்தனச்சோலையுளுறைவார்க்கிறைவாசங்கா
    னுதற்கட்டழலான்மேனுள்
வெந்திறல்வெந்திறல்வேளுமிரதியிரதியுமாண்மை
    விழைமென்கொங்கை
மந்தரமந்தரமிடைவிற்கரும்புருவங்கரும்புருவ
    மதிக்குங்காலே. (677)

இது கடையிரண்டடியு முதலொடிடைமடக்கு.

(இ - ள்) இறைவனே! அழகியதிருத்தோளிணையையுடைய அழகருபயதிருவடிகளை மனோவாக்குக்காயங்களாற்பொருந்தின வகுளாபரணமாறன் குடரிமலையினிடத்தோங்கினசந்தனச்சோலையுளுறைவார்கொங்கைக் குவமைகுறிக்குங்கான் மந்தரபருவதமேயாம், இடை ஆகாயமாம், கரியபுருவம் காமனுக்குவில்லாகியகரும்பினதுருவமாமென்றவாறு. சிவனுடைய நெற்றிக்கண்ணினுண்டாகியதழலினுன் முன்னைக்காலத்து வெவ்வியவீரம்வெந்து அதனோடு முருவமுமிழந்த காமனும்விரும்புவதா மிரதியும் ஆணுந்தன்மையையுவப்பதாங் காந்தியையுடையகொங்கைக்கெனக்கூட்டுக. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - செவ்விசெப்பல்.

பொய்யாதபேரின்பம்வேண்டினர்கள்பேரண்டம்பூத்தவுந்திச்
செய்யாசெய்யாள்விரும்பியுறையுறையூராவெனவேதிளைப்பக்கண்டு
மெய்யாமைமெய்யாமையேத்திலரஞ்சிலர்சிலரவ்வியமதண்ட
மெய்யாகமதிக்கிலரந்தோவந்தோநரகத்தேவீழ்கின்றாரே. (678)

இஃ திடையிரண்டடியு முதலொடிடைமடக்கு.

(இ - ள்) அழிவில்லாதபேரின்பத்தைவிரும்பின அறிவுடையோர்கள், எண்ணில்பல்கோடியண்டங்களைப்பெற்ற திருவுந்தியாகிய செழுவையுடையவனே திருமகள்விருப்புற்றுக்குடியிருக்குந் திருவுறையூரையுடையவனேயென் றொழிவில்லாதுகூறிப் பேரானந்த மெய்துவதனைக்கண்டுங் கேட்டும் விட்டுநீங்காத அறியாமையாற் சிலர் அவன்றிருவடிகளையேத்துகின்றிலர், அவ்வியமதண்டத்தைநினைந் தஞ்சுவதுஞ்செய்கின்றிலர், அதனைமெய்யென்பதுந்தெளிகின்றிலர்,

ஐயோ ஐயோ நரகின்கண்ணேவீழாநின்றனரென்றவாறு. எனவே எங்ஙனமீடேறுவரென்பது குறிப்பு. எய்யாமை எய்யாமையால் என மூன்றுவதுதொக்குநின்றுவிரிந்தது. அந்தோ அந்தோ என்பது இரக்கத்தின்கட்குறிப்பு. திணை - பாடாண். துறை - வாயுறை வாழ்த்து.

கைம்மலைக்கன் றுதவியமால்காட்கரைமான்கற்புநிலை
காட்டவேண்டி
யம்மனையம்மனை விரும்பிக்கிளைகிளைபோலயர்ந்திடவைத்
தகன்றகாலை
நம்மனையைக்காண்டொறுமெய்ந்நடுங்குதன்மேலுணர்வழிக்கு
நயந்தக்கிள்ளை
யெம்மனையெம்மனைபுக்காளினியினியபாலளிப்பா
ரெமக்காரென்றே. (679)

இது முதலயலடியோடு நாலாமடி முதலொடிடைமடக்கு.

(இ - ள்) கையையுடையமலையென்பதாம் யானைக்கு, அது முதலைகைப்பட்டநாண் மூலமேயென்றழைப்பச் சென்றுதவிய மாயோன் றிருக்காட்கரையின் மான்போலும்விழியினையுடையாள், நாணினுங் கற்புச்சிறந்ததென்று நூல்சொல்லக் குடிப்பிறந்தார்கண் ணிலைபெற்றதனை யெமக்கறிவிக்கவேண்டி யழகியமன்னனை எம்மு டைய ஆய் விரும்பிக் கிள்ளையான தெமதுகிளைபோலவருந்தும்படிக் குத் தோழிகைப்படவைத் துடன்போனகாலத் தியா னெமதுமனை யினதுபொலிவழிவைக்காணுந்தோறும் மெய்ந்நடுக்குறுதன்மேலும் முன்னங்கூறிய அக்கிள்ளை, தன்னைவளர்த்த அன்னையைக்காண விரும்பி அவ்வையே! எம்முடைய அன்னை யிம்மனையைவிட் டெந்த மாளிகையிலேபுகுந்தாளென்று மெமக் கினியபாலினை மேற்றருவார் யாவரென்று மென்னுணர்வையழியாநிற்குமென்றவாறு. பகுதி - உடன்போக்கு. துறை - நற்றாயிரங்கல். இவையாறு மீரடி யாதியொ டிடைமடக்கு.

இனி மூன்றடி முதலொடிடைமடக்கு வருமாறு:—

நூறுநூறுபோன்றூரமுமாரமு
நொய்தினின்வெதும்பாநீ
ரூறுமூறுமாமதன்படைபடைத்திட
வுபயகண்மலரந்தோ

வேறுமேறுமாபதிபதிகிளைத்திடு
மிருபதுகரத்தானைக்
கூறுசெய்கணையரங்கன்மெய்தோய்ந்திடாக்
கொம்மைவெம்முலையாட்கே. (680)

இஃ தீற்றடியொழித் தேனைமூன்றடியு முதலொடிடைமடக்கு.

இதனுள், நாறுநாறுபோன்றாரமுமாரமுமென்பது துகள்படும், சுண்ணம்புபோல முத்துவடமுஞ் சந்தனச்சேறுமென்பதாம். நீரூறு மூறுமாமதன்படைபடைத்திட வுபயகண்மல ரென்பது துன்பக்கண் ணீரூறுநிற்கும்; விரணங்களைக் கரியமதனன்பூப்பாணங்களுண்டாக் குகையா விரண்டுகண்மலர்களினிடத்துமென்பதாம். ஏறுமேறுமா பதிபதிகிளைத்திடுமிருபதுகரத்தானையென்பது இடபத்தையும் பூதத் தையும் வாகனமாகவேறும் உமைக்குப்புமானனவன்பதியாகியகைலை யையெடுத்த இருபதுகையுடைய இராவணனையென்பதாம். கூறு செய்கணையரங்கன்மெய்தோய்ந்திடாக் கொம்மைவெம்முலையாட்கே யென்பது துண்டஞ்செய்தபாணத்தையுடைய அரங்கநாதனைத்தழு வாத கொம்மைவெம்முலையாட்கென்பதாம். கொம்மைமுலையாட்கு, நாறும்; ஆரமும், ஆரமும். கண்கள், நீரூறும் என்றுமுடிக்க. திணை-பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - கண்டுகைசோர்தல்.

மின்னுமின்னுநுண்ணிடையிடைந்தனளினிமேதகுமின்னோடு
மன்னுமன்னுமெம்மனைவயின்வயினுறத்தினையொடுதேனார்ந்தே
துன்னுகங்குலிற்றுயின்றெழுந்திறையுறைதுவரைமாநகர்க்காலை
முன்னுமுன்னுமுண்டிண்டிவணிவணிகர்முறையொடும்பதிந்தாரே. ()

இஃ தீற்றயலடியொழித் தேனைமூன்றடியு முதலொடிடைமடக்கு.

இதனுள், மின்னுமின்னுநுண்ணிடையிடைந்தனளென்பது ஒளிரும் மின்னுப்போன்ற சிறியவிடையினையுடையாள் வருந்தின ளென்பதாம். மேதகுமின்னோடு, மன்னுமன்னுமெம்மனைவயின் வயி னுறத் தினையொடு தேனார்ந்தென்பது பெருமைபொருந்தின மின்னை யொப்பாளுடன்பொருந்திய மன்னனே! நீயும் நமக்குரிய எம்மில்லி னிடத்துக் காலம்பெறத் தினையுந் தேனுமருந்தியென்பதாம். துவரை மாநகர்க்காலை, முன்னுமுன்னுமுண்டிண்டிவ ணிவணிகர்முறையொ டும்பதிந்தாரென்பது துவராபுரியினிடத்துக் காலையிற்செல்வாயாக;

நுமக்குமுன்னே தினையொடுந் தேனைக்கூட்டியுண்டு இவ்விடத் திவளையொத்த கற்புங் காந்தியும்பெற்றமுறைபொடும் புமான்களோ நீங்காதுதங்கினூர் பலருமுண்டென்பதாம். பின்னு-உகரவிகுதி அல் வழிக்கண்மிக்கது, இயல்புகணம்வரலாலென்றறிக. மன் - அண்மை விளி. நீயென்னுமுன்னிலைப்பெய ரெஞ்சிநின்றுவிரிந்தது. ஒழிந் தனவு முறையிற்கொள்க. பகுதி - உடன்போக்கு. துறை - நெறி விலக்கல். விருந்துவிலக்கென்பது மிது.

தோலாததோலாதபனைநோக்குநோக்குபயசுடரைக்கூட்டி
மேலாகமூன்றுடையசிவனயன்கேட்பவுமழைப்பவிரைந்துமேனுட்
பாலாழிப்பாலாழிப்படையுடனேவந்துவந்துபடிறுதீர்நீ
யாலாலநுண்டுளைப்பற்பணியணையாயணையாயென்னனந்தையானே.()

இது முதலயலடியொழித் தேனைமூன்றடியு முதலொடிடை மடக்கு.

இதனுள், தோலாததோல் - சிங்கவேற்றிற்குந்தோற்றிடாத கஜேந்திரன். நோக்குநோக்கு - அழகியகண்கள்; பார்க்குங்கண்க ளென்றுமாம். ஆதபன் - சூரியன். உபயசுடர் - ஒழிந்த இந்துவும் அக்கினியும். மேலாகமூன்றுடைய வென்பதனை ஆகமேன்மூன்று டைய என மாறி, சொரூபத்தின்மேல் நோக்குமூன்றுகவுடையவென வியைக்க, சிவனயன்கேட்பவும் என்பது சிவனும் அயனும் கேட்கும் படிக்கும்(உம்மையால்)யாவருங்கேட்பவும் என்பதாம். அழைப்ப - மூலமேயென் றெருகாற்கூப்பிட. மேனுள் - பண்டு. பாலாழிப் பால் - திருப்பாற்கடலுட் கடவுள்; "பாலதானையி"னென்பதாலறிக. வந்துவந்தென்பதை உவந்துவந்து என மாறுக. படிறுதீர்நீ - இடுக் கண்டவிர்த்தநீ. ஆலாலநுண்டுளைப்பற்பணியணையாய் - துரும்பு நஞ்சினைக்கக்குஞ் சிறியதுளைப்பற்பாம்பணையையுடையாய். அணையா யென்னனந்தையானேயென்பது - என்னை அனந்தபுரத்தானே! அணைவாயாகவென்பதாம்.

(இ - ள்) பாலாழியுட்கடவுளாகிய அனந்தபுரத்துமாதவனே! கஜேந்திரன், சிவனும் அயனுங்கேட்க மூலமேயென்றழைப்பச் சக் கராயுதத்துடன்வந்துதவிய கருணையையுடையநீ, யான் பலகாலும் நினது திருமார்பைநினைந் திரங்கவு மென்னை யணையாதது என்ன

தறுகண்மையோ வென்றவாறு. பொருள்கோள் - கொண்டுகூட்டு; மாட்டுறுப்பெனினு மாம். திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை - மெலிவொடுகூறல்.

வயவாற்றவழ்சூல்வளையுயிர்த்தமணிவெண்டரளநிலவெறிக்குங்
கயவாய்க்கயவாய்க்கருமேதிகமலக்கமலக்கழிநறவுண்
டுயவாற்றுயவாற்றிடையுழக்கத்தூநீர்க்கயலேகயலேய்திவ்
வியவாவியவாமரங்கேசனெய்தானெய்தான்மதனம்பே. (683)

இது முதலடியொழித் தேனைமூன்றடியு முதலொடிடைமடக்கு. இதனுள், வயாவென்பது வயவாயிற்று.

(இ - ள்) சூலுளைந்தவருத்தத்தோடுந்தவழுஞ் சூல்வளையீன்ற அழகியவெண்முத்தம் நிலவுபோலச்சுடர்விடுங் கயத்தினிடத்துப் பெரியவாயையுடைய கரியவெருமைச்சாதி, தண்ணீரிடத்துத் தாமரையுக்க மிக்கதேனையுண் டதனுலறிவுதிரிந்து தூய்யவாற்றி னடுவேபுகுந்துகலக்கத் தூயநீரின்கரையருகே கயலுகண்டுசேரும் நல்லவாவியையுடையவா மிரண்டாற்றினடுவே வாழ்வுபெற்ற அரங்க நாத னென்னைத் தழுவுகின்றில னதனையறிந்து காமன் றனதுமலர்ப் பாணங்களைத் தொடுத்தன னென்றவாறு. எனவே, இதற் கினிச் செயல் யாதென்பது குறிப்பு. திணையுந் துறையு மிதுவுமது.

நாதனுதனூர்விளங்கிறையெண்ணிலாவெண்ணிலாநகுபோத
வேதன்வேதனைபுரிந்திடமறைதருமறைதரும்விறன்மாயன்
பாதபாதபந்தனையுணர்ஞானமாம்பலன்பலன்றருமாபோ
லோதியோதியினுறுநர்பாற்றருவதுதருவதுமுளதாமே. (684)

இது நான்கடியு முதலொடிடைமடக்கு.

(இ - ள்) நாதனுதனூர்விளங்கிறையென்பது சகலதேவன் மார்க்குஞ்சுவாமியாவான், திருவாதனூரின்கண்டோற்றமெய்தின சோதியென்பதாம். எண்ணிலாவெண்ணிலாநகுபோத வேதன்வே தனைபுரிந்திடமறைதருமறைதரும்விறன்மாயனென்பது அலகிறந்த வெண்ணிலாவைப்போலமிளிரும் ஞானத்தையுடைய பிரமன்றுன்புற மது கைடவரான்மறைந்தவேதத்தை மீளவும் அன்னமாகி ஓதி அவ னுக்குபதேசிக்கும் ஞானவென்றியையுடைய மாதவனுமலையிடத்

தென்பதாம். பாதபாதபந்தனையுணர்ஞானமாம்பலன்பலன்றருமாடோ லென்பது திருவடிகளாகியகற்பகதரு, தன்னைப்பிரமமென்றுணரும் ஞானமாகியகனியை யுலகத்துயிர்கட்குதவு மிலாபம்போலென்பதாம். ஓதி யோதியினுறுநர்பாற் றருவது தருவதுமுளதாமே யென்பது எல்லாநூல்களையுங்கற்று மலைகளினிடத்திருக்கும் பெரியோரிடத்து அம்மலைகளென்பவற்றினுளுண்டாகியமரங்கள் தருமான்மலர்பங்கள் இல்லையென்றவாறு. மாதவனுமலையென்பது மாட்டேறில்லா வுருவகம். திணை-பாடாண். துறை-கடவுள்வாழ்த்து. ஆக முதலொடிடைமடக்கு-கரு.

இனி முதலொடுகடைமடக்கு வருமாறு:—

அருங்காயமருங்காயமருந்தனங்கள்வடமேரு
வன்னவன்ன
விருங்காவித்துணைநெடுங்கட்கிணையெனலாந்துணைமென்றோட்
கிணையென்சொல்வேன்
சுருங்காவண்புகழ்த்திருமால்வடமலைமானெழில்புணர்ந்து
துறந்தாராவி
யுருங்காமெய்ந்நிறைதளர்வித்திடுமுணராதிகழ்ந்தனனென்
னுயிரைமன்னே. (685)

இது முதலடி முதலொடுகடைமடக்கு.

(இ - ள்) அளவிடற்கரிய ஆகாய மிடையாகவமராநிற்கும்; அதன்மேன் முலையிரண்டு மிரண்டுமேருவையொத்தன; நிறத்தை யுடைய பெருமைபொருந்தின நீலோற்பலமிரண்டும் நெடியகண் ணிணையென்றுசொல்லப்படுவதாம்; இவையன்றி யிணையாகியமெல் லியதோள்கட் குவமை யாதென்றுகூறுவேன்? ஆகையா லிம்மானின தவயவியவயவங்களின்காந்தி, இவளைப்புணர்ந்துநீங்கினான்மாவை யுருக்கி, நிறையைத்தளர்வித்திடுமென்பதனையறியாதே, மிகவு மென் னுயிரனையாளை யிகழ்ந்தனனென்றவாறு. எனவே, இகழ்ந்தது தகாதென்பது பயன். இதனுள், உருக்காவென்னும் வினையெச்ச எதிர்மறைவாய்பாடு, உருங்காவென மெலிக்கும்வழிமெலிந்துநின்று, தளர்வித்திடுமென்னுந் தன்வினைகொண்டது. மன் ஆக்கம். ஏகாரம் ஈற்றசை. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - பாங்கன் றலைவனை யிகழ்ந்ததற்கிரங்கல்.

வயல்வாய்மென்முறுக்கவிழ்ந்ததாமரைவாய்க்களைகடிவார்
வதனராசிக்
கயல்வாவிக்கயல்வாவித்துணையுடனேயமைவரக்கண்
டப்பாலப்பால்
வியல்வாய்தண்செறுவுழுநர்மகளிர்துணைவிழிமுகமும்
வெய்யபோதுந்
துயவாலங்கறிவரிதாங்*குறுங்கேசனெனும்பிறவித்
துயர்போமன்றே. (686)

இஃது இரண்டாமடி முதலொடுகடைமடக்கு.

(இ - ள்) வயலினிடத்து மெல்லியமுகையாய்ப் பிணியவிழ்ந்த தாமரைக்கண், அந்தவயல்வாய்க் களைகடியுமகளிர்முகசமூகத்துக் கயல், வாவியினிடத்துக்கயல்கள்பாய்ந்து இரண்டாகத்தங்க, அந்த வயற்கடுத்த அவ்விடத்து, தண்ணீர்துளும்பும்பரப்புடைய குளிர்ந்த வயலின்கண் ணுழு மள்ளர், வயலிற்களைகடியும் முற்கூறியமகளிர் துணைவிழியோடுகூடியமுகத்தினையும், கண்டார்விரும்புங் கயல்தங்கு தாமரைப்போதினையும் மயக்கத்தாற் பகுத்தறிவரியதன்மையராய் வாழுஞ்செய்கையையுடைய குறுங்காபுரிக்கீசனேயென் றுலகத்துள் ளீர்சொல்லுமின்; நமதுபிறப்பாயதுயர் நம்மைவிட்டுநீங்குமென்ற வாறு. திணை - பாடாண். துறை - ஓம்படை. செவியறிவுறூஉ, வாயுறைவாழ்த்தினுஞ்சாரும்.

மாந்தரிலொன்றெனலாயமனுராமனேவலிற்போய்
வாரிதாவி
யேந்தெழிற்பொன்னாழியினைச்சானகிகைக்கொடுத்தருள்பெற்
றிலங்கைமூதூர்
வேந்தனையும்வேந்தனையும்விண்ணிடைவைத்தேதமீட்டும்
வேலைவேலை
பாய்ந்தெளிதிற்கண்டனன்றேவியையென்றாற்கிணையெவரே
பகருங்காலே. (687)

இது மூன்றாமடி முதலொடுகடைமடக்கு.

இதனுள், அருள்பெற்றிலங்கைமூதூர்வேந்தனையும்வேந்தனை யும்விண்ணிடைவைத்தென்பது பிராட்டியருள்பெற்றபின்ன ரிலங்கை

* குறுங்கை - திருக்குறுங்குடி.

யாகியபெரியவூரை யெரிகொளுத்தி யதுவெந்துகூடுமளவும் அந்நகர்க் கரசனாகிய இராவணனையும் அவன்சேனாபதித்தலைவரையும் ஏழுநாள் விசும்பிலிருத்தியென்பதாம். வேலைவேலைபாய்ந்தென்பது பரந்த கடலைக்கடந்தென்பதாம். கண்டனன்றேவியையென்றாற்கிணையெவ ரேபகருங்காலென்பது சீதையைத்தரிசித்தனனென்ற திருவடிக்கு விசாரித்துச்சொல்லுங்கா லுலகத்தொப்பா ரொருவருமில்லையென்ப தாம். ஒழிந்தனவு முரையிற்கொள்க. திணை - வாகையைச்சார்ந்த பொதுவியல். துறை - தூதுவென்றி.

ஓவாதகருங்கடன்மொண்டெழுபருவப்புயல்பெயலோடுபயகண்ணீர்
தூவாநின்றுறுபுணரிக்கிடைவலவாகொடிநெடுந்தேர்தூண்டுமாற்றாற்
றேவாதிதேவனெனுந்திருநெடுமால்புவிமகள்கோன்சிறந்தசெல்வ
நாவாயினாவாயினடைவதல்லாலடைவதிடனாமேநாமே. (688)

இது நாலாமடி முதலொடுகடைமடக்கு.

இதனுள், நாவாயினாவாயினடைவதல்லாலென்பது திருநாவா யென்னுந் திருப்பதியினிடத்துக் கப்பலிற்சென்றடைவதல்லாதே யென்பதாம். அடைவதிடனாமேநாமேயென்பது நாமடைவதுண்மை யாமோவென்பதாம். விரைவிற்சென்றடைவ துண்மையாகாதென்ற வாறு. ஏகாரமிரண்டனுள், முதலது எதிர்மறை. ஏனைய தீற்றசை. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - பாகனைவெறுத்தல். இவை நாலு மோரடி முதலொடுகடைமடக்கு.

இனி யீரடி முதலொடுகடைமடக்கு வருமாறு:—

விண்டுவிண்டுவீழ்தரும்படிமுருகவேள்விடவேல்வேல்
வண்டுவண்டுவீழ்காவிமாவடுவுமைபூமான்மான்
அண்டராரமிர்தமர்விழிமலைமுலையவளாடக்
கண்டகாவரங்கேசர்தங்கணவரைக்கடிகாவே. (689)

இது முதலடியிரண்டு முதலொடுகடைமடக்கு.

இதனுள், விண்டுவிண்டு........வேல்வேலென்பது மலைபிளந்து வீழும்படி குமரனெறிதற்குப்பொருந்தினவேலுமென்பதாம். வண்டு வண்டுவீழ்........பூமான்மானென்பது அம்பும், வண்டுகள் தேனை யுண்ணவிரும்பு நீலோற்பலமும், மாவடுவின்பிளவும், உமாபதிகரத்

தின்மானுமென்பதாம். அண்டாரமிர்தமர்விழி..................கடி காவேயென்பது அமிர்தம்போன்ற அமர்செய்யும்விழியையும், மலை போன்றமுலையையுமுடையா ளவள்விளையாடக்கண்டகா, நண்பனே! அரங்கேசரது மேகந்தவழும்வரையினிடத்துக் காவலையுடையசோலை யென்றறிவாயாகவென்பதாம். எண்ணும்மைகள் தொக்குவிரிந்தன. ஏல்வேல் - வினைத்தொகை. நண்பனேயென்னுமுன்னிலை தோன் றாதுநின்றது. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பிடங்கூறல்.

அண்டமண்டமுண்டகிலமுநிலையழிந்ததனாலால்
பண்டுகண்டுயிலணையுளானவன்மகன்படைபெளவ
முண்டமுண்டமாமுனிநிகர்காதிகான்முளைமுன்முன்
கண்டவில்லினைக்கண்டவில்லாக்கினனெமர்கண்ணே. (690)

இது முதலடியு மூன்றாமடியு முதலொடுகடைமடக்கு.

(இ - ள்) அண்டமண்டமுண்டகிலமுநிலையழிந்ததனுலென்பது அண்டத்தை மேலேயோங்கி யோடாநின்ற பிரளயம், எல்லாவுலகத் தையுமுண்டதனாலேயென்பதாம். ஆல்பண்டுகண்டுயிலணையுளான வன்மகன்படைபெளவமென்பது ஆலாகிய அமளியுள்ளான்மகனாகிய பிரமன்படைத்த உப்புக்கடலையென்பதாம். உண்டமுண்டமாமுனி நிகர்காதிகான்முளைமுன்முனென்பது உண்ட குறுமுனியையொத்த காதிசேயாம் விச்சுவாமித்திரன்முன்னே முன்னுளென்பதாம். கண்ட வில்லினைக்கண்டவில்லாக்கினனெமர்கண்ணேயென்பது அவன்கண்ட வில்லினைக் கையினாற் றுண்டப்பட்டவில்லாக்கினனெவ னவ னெம் போல்வார்கண்போல்வானென்பதாம். ஒழிந்தனவு முறையிற்கொள்க. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

கற்றவர்கற்றவர்வியப்பான்வளைத்தவன்மூவெயின்முருக்கக்
கணையானா
னற்றவர்தம்மகந்துறப்பதற்றவன்வெள்ளியங்கிரியை
யடியோடேந்தப்
பெற்றவளங்கெழுமதுகையிருபதுகையுடைவயிரப்
பிறங்கல்போன்ற
கொற்றவன்கொற்றவன்சிரத்தைக்குறைத்தவனூர்தமிழ்மறைசங்
கோவில்கோவில். (691)

இது முதலடியு நான்காமடியு முதலொடுகடைமடக்கு.

இ த னு ள், கற்றவர்கற்றவர்வியப்பான்வளைத்தவன்மூவெயின் முருக்கக்கணையாளு னற்றவர்தம்மகந்துறப்பதற்றவன் என்பது கல்லை வில்லாகத் தனுசாத்திரங்கற்றவ ராச்சரியமுறவளைத்தவன் பொன்னும் வெள்ளியும் இரும்புமான மூன்றுகோட்டையையுமழிக்க அவனுக்குக்கணையானவன், நானென்னுமாங்காரமில்லாதாரிதயத்தை விட்டுநீங்காதவன் என்பதாம். கொற்றவன் கொற்றவன்சிரத்தைக் குறைத்தவனூர் தமிழ்மறைசங்கோவில்கோவிலென்பது இலங்கைக் கரசன் வெற்றிபொருந்தின வலியசிரத்தைக் கணையாற்குறைத்தவ னுறையும்பதி, திருவாய்மொழியாகிய தமிழ்நெறியுஞ் சுருதியாகிய வடமொழியொலியுந் திருச்சங்கொலியும் ஒழிவில்லாத திருவரங்கம் பெரியகோவிலென்பதாம். ஒழிந்தனவு முரையிற்கொள்க. திணை - பாடாண். துறை - நகரவாழ்த்து.

குன்றலைக்குமிருபதுகைக்குன்றினைக்கொன்றுலகளித்த
  குறுங்கைக்கோமான்
கன்றலைக்குங்குணிலெனச்செங்கனியுதிர்த்தோனணைகிலன்மேற்
  களைகண்யாதோ
தென்றலைத்தென்றலைத்தோரய்வருமதன்விற்கரும்பாய்நாண்
  டேனாய்த்தேனாய்
மன்றலைமன்றலைக்காவின்மலரம்பாய்வருமதிகொல்
  வானில்வானில். (692)

இது கடையீரடியு முதலொடுகடைமடக்கு.

(இ - ள்) கைலையாகியகுன்றினை யெடுத் தசைக்கு மிருபது கையையுடையனுங் குன்றுபோன்ற இராவணனைப் பாணத்தாற்கொன் றுலகத்துயிர்களைக்காத்த குறுங்கைக்கரசனாகிய, கன்றைக் குறுந்தடி யாகக்கொண்டு கனியுதிர்த்தமாயோன், தன்னை விரும்பப்பட்ட என் னைத் தழுவுகின்றிலன், ஆதலால், தென்றிக்கிற் றென்றலானதைத் தேராகவும், கரும்பை வில்லாகவும், பூவிற்றேனையாராயப்பட்ட வண் டை நாணாகவும், மணத்தைப்பொருந்தின தலைப்பட்டகாவின்மலர்களை அம்பாகவுங்கொண்டு மதனன்வாராநின்றனன்; வானில் மதியமனைப் போல் மேல்வரும்; இனி இதற்கு மேற் களைகண் யாதோ அறிகிலே னென்றவாறு. கொல்வான் - நமன். திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை - மெலிவொடுவைகல்.

கோட்டுநித்திலக்குவையொடுங்குங்குமத்தொளிமீதே
பூட்டுபூட்டுவெம்முலைமலையிடைபொறுதேவீவீ
நாட்டுநாட்டுதலின்றுநீஇநாங்கைமால்வரையார்யார்
மீட்டுநீள்குழற்காட்டின்மேற்பன்மலர்வேய்ந்தாரே. (693)

இஃது இடையிரடியு முதலொடுகடைமடக்கு.

இதனுள், கோட்டுநித்திலக்குவையென்பது சங்கீன்ற முத்தின்றிரளென்பதாம். பூட்டுபூட்டுவெம்முலைமலையென்பது பூட்டப்பட்ட பூணையுடைத்து, விருப்பத்தைத்தரும் முலையாகியமலையென்பதாம். இடைபொறுதேவீவீயென்பது முலையாகியமலைகள், தம்மைத்தாங்குமிடையானதற்குத் தம்மைப்பொறுதே இறுதியைக்கொடுக்குமென்பதாம். நாட்டுநாட்டுதலின்றுநீஇ நாங்கைமால்வரையார்யாரென்பது நாளையுடைத்தென்று கண்டார்குறித்தலை இக்காலத்தறிந்தும், திருநாங்கைமாயோன்வரையார் யார்தாமென்பதாம். மீட்டு நீள்குழற்காட்டின்மேற் பன்மலர்வேய்ந்தாரென்பது அதன்மேலே மீளவும் நீண்டகுழலாகியகாட்டின்மேற் பலமலரையும் அணிந்தவரென்பதாம். பூட்டு - பூணையுடைத்து. வீவீ - இறுதலைக்கொடுக்கும். நாட்டு - நாளையுடைத்து. நாட்டுதல் - குறித்தல். பகுதி - பாங்கற்கூட்டம். துறை - மருங்கணைதல்.

படுகொலைவாளரக்கனைக்கொன்றுலகளித்தான்வடமலைபோற்
 புணைத்தகொங்கை
யிடுகிடையொன்றிடுகிடையொன்றேனுமதுபொறுக்கலா
 தென்றுலென்றுல்
விடுகதிர்வெவ்வழல்கதுவியடிநிலந்தோயாதெழின்மெல்
 லியலையானே
கொடுகொடுவன்சுரங்குறுகினன்னுதாவுலென்னிருதோட்
 குன்றுங்குன்றும். (694)

இது முதலயலடியு நாலாமடியு முதலொடுகடைமடக்கு.

இதனுள், நன்னுதால்-நல்லநுதலையுடையவளே. வடமலைபோற் பணைத்தகொங்கையென்பது முலைகளிரண்டும் வடமலைவாணன் மலைபோலப் பணைத்தனவென்பதாம். இடுகிடையொன் றிடுகிடையொன்றேனு மதுபொறுக்கலாதென்று லென்று லென்பது சிறுகிய இடையு

மொன்றே; சேம இடையில்லை; இதன்மேலினி இடப்பட்ட கிடைச்சர மெனினு மதுவும் பொருடென்றறிந்தா லதன்மேலும் ஆதித்தனு லென்பதாம். விடுகதிர்வெவ்வழல்கதுவி யடி நிலந்தோயாதென்பது நீட்டப்பட்ட கிரணங்களாலுண்டான வெம்மையையுடைய அழல்பற் றுதலால் நடப்போர்பாதங்க ணிலத்திற்றோயாதென்பதாம். எழின் மெல்லியலையானேகொடு கொடுவன்சுரங்குறுகி னென்னிருதோட் குன்றுங் குன்றுமென்பது அழகிய மெல்லியசாயலையுடையாளை யான் கொண்டுபோய்க் கொடிய வன்சுரத்தை யணுகில் அவளது மலர் போன்ற தாள்களை என்சொல்லவேணும், எனது இருதோள்களாகிய மலைகளு மெலிவெய்துமென்பதாம். ஆதலா லுடன்கொண்டுபோகக் கூடாதென்பது பயன். பகுதி - உடன்போக்கு. துறை - அருமை கூறல். இவை யாறு மீரடி முதலொடுகடைமடக்கு.

இனி மூன்றடி முதலொடுகடைமடக்கு வருமாறு:—

பொய்யாமைபொய்யாமையுரனுடனைம்புலனவித்த
பொற்பார்பொற்பார்
மொய்யாமொய்யாடரக்கர்முரணழிப்பாயெனவிரங்கி
முன்பின்முன்பின்
கையாற்கையாற்றிநெடும்பொருசரந்தொட்டழித்ததனுற்
காமர்காமர்
மெய்யானதெரித்தவற்கும்பரனயோத்தியிலுதித்த
வேந்தர்வேந்தன். (695)

இது முதலடிமுதலிய மூன்றடியு முதலொடுகடைமடக்கு.

(இ - ள்) பொய்யாமைபொய்யாமையுரனுடனைம்புலனவித்த பொற்பார் பொற்பாரென்பது சத்தியவசன மிடைவிடாத ஞானத்து டன் புலனைந்தையும்வென்ற பொலிவினையுடையோரா முனிவரும், பொன்னுலகின்கண்ணுள்ள விண்ணோருமென்பதாம். பொற்பார் - இடத்தானு ஆகுபெயர். மொய்யாமொய்யாடரக்கர்முரணழிப்பா யெனவிரங்கி யென்பது திருப்பாற்கடலிற் றிரண்டுசென்று அமர் விளைக்கும் அரக்கராகியபகையை யழிப்பாயாகவென்று முறையிட்ட தற்கிரங்கியென்பதாம். முன்பின்முன்பினென்பது முன்னாளில் மிடுக் கினையுடையவென்பதாம். கையாற்கையாற்றிநெடுமென்பது கைக ளாற் காவலாமொழுக்கத்தோடுமென்பதாம். பொருசரந்தொட்டழித்

ததனுலென்பது போரையுடைய பாணத்தையேவி யந்தப்பகையை யொழித் தவர்துன்பத்தைக் களைந்ததனுலென்பதாம். காமர்காமர் மெய்யானதெரித்தவற்கும் பரா னயோத்தியிலுதித்த வேந்தர்வேந்த னென்பது காமனுர் அழகியவுடலையெரித்த சிவனுக்கும் அயன்முத லோர்க்கும் பரனுவான், ஸ்ரீ திருவயோத்தியில் திருவவதாரஞ்செய்த அரசர்க்கெல்லாமரசனு மிராமனென்றவாறு. திணை-பாடாண். துறை-கடவுள்வாழ்த்து.

அன்றினரன்றினராகிக்கடைதுறந்தார்களிலிலங்கை
யாளியாளி
மென்றினைமென்றினைதலைத்தீர்கிளிமொழியைப்பிரித்தவன்றன்
மெய்யின்மெய்யி
னின்றறியாமனமதனிற்குடக்கன்னன்மருமத்தி
னிரலம்பேவிக்
கொன்றையன்கொன்றையன்முதலோரிடர்களைந்தானகர்தமிழோர்
கூடல்கூடல். (696)

இஃ தீற்றயலடியொழித்ததேனைமூன்றடியு முதலொடுகடை மடக்கு.

(இ - ள்) அன்றினரன்றினராகிக்கடைதுறந்தார்களிலென்பது முற்காலத்து அடிமைத்தமராயினுர்சாபத்தால், சத்துருக்களாகி வாயில்காக்குந்தொழிலைவிட்டுநீங்கினுரிருவருளென்பதாம். இலங்கை யாளியாளியென்பது இலங்காபுரியையாண்டவனுஞ் சிங்கவேறு போன்றவனுகியவென்பதாம். மென்றினைமென் றினைதலைத்தீர்கிளி மொழியைப்பிரித்தவன்றன்மெய்யின் மெய்யினின்றறியாமனமதனி லென்பது மெல்லிய தினையைத்தின்று பசியால்வரும் வருத்தத்தைப் போக்கும் புனக்கிளியினது மொழிபோலு மொழியையுடைய பிராட்டியைத் தன்னைவிட்டுநீக்கினவன் மேனியிலும், உண்மையி னிலைபெற்றறியா மனத்திலு மென்பதாம். குடக்கன்னன்மருமத்தி லென்பது கும்பகருணன்மருமத்திலு மென்பதாம். நிரலம்பேவி யென்பது ஒருதொடையிற் பல அம்பைத்தொடுத்தேவியென்பதாம். கொன்றையன் கொன்றையன்முதலோரிடர்களைந்தானகர் தமிழோர் கூடல்கூட லென்பது அவ்விருவரையுங்கொன் றயனுஞ் சிவனும்

முதலியோ ரிடும்பையைப்போக்கின னிருக்குநகர் தமிழ்ச்சங்கத்தார் கூடியிருத்தலையுடைய மதுராபுரியாமென்றவாறு. திணை - பாடாண். துறை - நகரவாழ்த்து.

வானைநீவியவரைகளுயர்மரங்களனைத்தையும்வா
னரங்களாய
தானைதானையவாக்கொண்டமர்விளைநாள்வீடணனார்
தம்முன்றம்முன்
னானையானையினுதிவன்கோடுழுமார்பனையுயிருண்
டம்பாலம்பா
லேனையேனையர்வியப்பான்மீட்டவனல்லாற்பொருள்வே
றென்னுவென்னு. (697)

இது முதலடியொழித் தேனைமூன்றடியு முதலொடுகடைமடக்கு.

(இ - ள்) வானைநீவியவரைகளுயர்மரங்களனைத்தையுமென்பது மேகபடலத்தைத்தைவரு மலைகளு மரங்களுமாகிய அனைத்தையுமென் பதாம். வானரங்களாயதானைதானையவாக்கொண்டமர்விளைநாள் வீடணனார்தம்முன் றம்முன்னானை யானையின்றுதிவன்கோடுழுமார்பனை யென்பது மர்க்கடங்களாகியபடைக ளாயுதமாகக்கைக்கொண்டு செருச்செய்யாநின்றகாலத்து வீடணனார்தம்முன்பாக அவர்தமைய னானை, அட்டகசங்களின் கூரிய வலிய கோடுகளழுத்துமார்பானை யென்பதாம். உயிருண்டு அம்பால், அம்பாலேன் ஐ ஏனையர்வியப் பான்மீட்டவனல்லாற் பொருள்வேறென்னு வென்னுவென்பது அம் பினா லுயிரையுண்டபின் அழகியநல்வினையுடையேன்சுவாமினியாகிய சீதையைத் தன்னையொழிந்தகடவுள ராச்சரியப்படுவான் சிறையை மீட்டுக்கொண்டுவந்தவனை யல்லாதே வேறேசிலபொருளுண்டென்று என்னுடையநா வோதாதென்றவாறு. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

மூன்றினுமூன்றினுந்தொழிலோடொன்றுமீளாநரகத்
தூடுமூடு
மான்றதுயரிழைநன்றிகொல்வினைபோன்றிடரிழைவல்
லரக்கர்தங்கோ

